

# 26

# விருத்தி

"நேத்து சுகுணாவின் கச்சேரி இருந்ததே, உங்களுக்குத் தெரியாதா?'' என்று தியாகராஜன் என்னை ஹிந்தியில் கேட்டான்.

"எங்கே?"

"இந்திரா நகரிலே மிஸஸ் குப்தா வீட்டிலே. உங்களைப் பாக்கலாமென்றுதான் நானே அங்கே போனேன்."

தியாகராஜனுக்கு என்னிடம் இருந்த அக்கறை முழுக்கமுழுக்க சங்கீதம் என்று சொல்ல முடியாது. என் அண்ணன் ஹரிகிருஷ்ணன் ஒரு கமிஷன் ஏஜெண்ட். அவன் மூலம் சென்னை கோடவுன் தெருவில் மலிவு விலையில் பாண்ட் துணித் துண்டுகள் தியாகராஜன் வாங்கித் தவணை முறையில் விற்பான். ஒரு பாண்ட் துணித் துண்டுக்கு ஐந்து ஆறு ரூபாய் கிடைக்கும்.

தியாகராஜனிடமிருந்து விடுவித்துக் கொண்டு வெளியே வந்த போது வெயில் சுளீரென்று முகத்தில் உரைத்தது. நாற்பது வயதாகி யும் இன்னும் என் முகத்தில் பருக்கள் மாதிரி ஏதாவது வெடித்து வருகின்றன. அவற்றின் மீது கைக்குட்டை படும்போது மனித வாழ்க்கையே வெறுத்துப் போகும்படியான வேதனை ஏற்படும். அதே போலச் சங்கீதம் பற்றி எவ்வளவோ தெரிந்தும், தெரிந்ததைப் பூரணமாகப் பிறர் கேட்கும்படி பாட முடியாத போதும் வாழ்க்கை வெறுத்துப் போகும். என்னிடம் பாட்டுக் கற்றுக் கொள்கிறவர்கள் நான் அளித்த சங்கீதத்துக்காக மிகுந்த மரியாதை காட்டக்கூடும்; ஆனால் நான் கற்றுக் கொடுத்ததில் நூறில் ஒரு பங்கை அவர்கள் பாடி, அவர்களைச் சற்றும் அறியாத நூறுபேர் அதைக் கேட்டு மகிழ்ச்சியில் தலையாட்ட வைக்கும் அனுபவம் எனக்குக் கிடைக்காது. இதையெல்லாம் பற்றி நினைக்கும் கட்டத்தை நான் கடந்தாகிவிட்டது என்பதைக் கூட மறந்திருக்கும் வேளையில் திடீரென்று சுகுணா மாதிரி யாராவது வந்து நினைத்ததெல்லாம் பொய் என்று நிரூபித்து விடுகிறார்கள்.



பக்கத்திலிருந்த கடைக்குச் சென்று, "ஒரு டெலிபோன் செய்ய வேண்டும்" என்றேன்.

கல்லாப்பெட்டிக்கடியில் அவன் கையை விட்டு டெலிபோனை வெளியே எடுத்தான். "ரொம்ப நேரம் காக்க வைக்காதே, சேட்," என்றான்.

நான் டெலிபோனைக் கல்லாப்பெட்டியின் ஓர் ஓரத்தில் பொருத்தி வைத்துக் கொண்டு எண்களைச் சுற்றினேன். அந்தச் சிறு இடத்தில் முதுகையும் கழுத்தையும் வளைத்துக் கொண்டு எண்களைச் சுழற்றுவது மிகவும் கடினமாக இருந்தது. அந்த உபாதையைக் கவனத்திலிருந்து ஒதுக்கும் முயற்சியாகப் பையில் கையை விட்டு ஒரு ரூபாய் நாணயமொன்றை எடுத்துக் கல்லாப் பெட்டி மீது வைத்தேன். கடைகளில் சென்று டெலிபோன் செய்யப் போனால், 'ஒரு ரூபாய் இருந்தா டெலிபோனை எடு' என்று கண்டிப்பான நிபந்தனையைக் கடைக்காரர்களிடமிருந்து திரும்பத் திரும்பக் கேட்டு எது என்ன அவசரமா இருந்தாலும் முதலில் ஒரு ரூபாயாகக் கையில் வைத்துக் கொண்டுதான் எங்கே டெலிபோன் என்று தேடிப் போக வேண்டியிருக்கிறது. டெலிபோனுக்கென்று ஒரு ரூபாயாக முதலிலேயே எடுத்துக் கொடுத்துவிட்டால் அப்புறம் கடைக்காரனைப் பத்துரூபாய்க்குச் சில்லறை கேட்டால்கூடக் கொடுத்து விடுவான்.

வழக்கம் போல முதல் முறை டெலிபோன் மணியடிக்க வில்லை. சற்றுப் பொறுத்து இன்னொருமுறை எண்களைக் கழுத்து வலியையும் பொருட்படுத்தாமல் நிதானமாகச் சுழற்றி னேன். மறுபுறத்தில் மணி அடித்தது. நான் பேசுவதற்கு உஷார் நிலையில் இருந்தேன். வெகு நேரம் இருந்தேன். மறுபுறத்தில் மணி அடித்துக் கொண்டே இருந்தது.

கடைக்காரனிடம் ஒரு ரூபாயைத் திருப்பி வாங்கிக்கொண்டு மீண்டும் தெருவில் காலடி எடுத்து வைத்தேன். வெயிலின் கடுமை இன்னம் அதிகமாக இருந்தது. சுகுணா மீது ஆத்திரம் சற்றுக் குறைந்து இருந்தது.

பஸ் நிலையத்திலேயே நிரம்பி வழிந்த பஸ்ஸில் என்னை நுழைத்துக் கொண்டு எழுபது பைசா சீட்டு வாங்கிக் கடைசி வரை நின்றபடியே பயணத்தை முடித்து ஒரு பங்களாவினுள் நுழைந்தேன். வெராண்டாவுக்கு வந்த வேலைக்காரப் பையனிடம், "அம்மா இருக்கிறாங்களா?" என்று கேட்டேன். அவன் உள்ளே போய் இரு நிமிடங்களுக்கெல்லாம் அன்னபூரணா வந்தாள்.

"எப்ப வந்தீங்க, மாஸ்டர்?" அவள் சமையல் செய்து கொண்டிருக்க வேண்டும். அவளுடைய புறங்கையில் கோதுமை மாவு லேசாகப் பரவியிருந்தது.

"அரை மணியா டெலிபோன் பண்ணி லைன் கிடைக்காம நேரேயே வந்துட்டேன்."

"அப்படியா?? இங்கே ஒண்ணுமே வரலியே?"

"மணி அடிச்சுண்டேயிருந்ததே?"

அன்னபூரணா விவாதத்தை வளர்க்க இடம் தராமல் பதில் சொல்லாமல் இருந்தாள்.அடுப்பில் ரொட்டி தீய்ந்து போயிருக்கக் கூடும்.

"எப்போ கிளாஸ் வைச்சுக்கலாம்?"

அன்னபூரணா பளிச்சென்று, "இன்னிக்கு வேண்டாமே மாஸ்டர்" என்றாள்.

நான் என்னையறியாமல் தோள்களை உயர்த்தினேன். அன்னபூரணா கவனித்துவிட்டாள்.

"ஒரு அரை மணி நேர வேலை பாக்கியிருக்கு. ஆனால் உங்களை எப்படிக் காக்க வைக்கிறது?"

"அரை மணி நேரம்னா பரவாயில்லை. நான் இங்கேயே இருக்கேன். இன்னிக்கும் தவறினா அப்புறம் இரு வாரங்களுக்கு முடியாது."

"வெளியூர் போகிறீர்களா?"

"ஆமாம்" என்று பொய் சொன்னேன்.

அவள் உள்ளே சமையலை முடிக்கப் போனாள். நான் ஹாலில் மின்விசிறியைக் கிளப்பி விட்டு சோபாவில் சாய்ந்தேன்.

அன்னபூரணாவின் மகனும் மகளும் உள்ளேயிருந்து வந்தார்கள். இருவரும் ஜீன்ஸ் அணிந்திருந்தார்கள். மகன் என்னைப் பாராது மாதிரிப் போனான். மகள் மட்டும் பலவீனமாக ஒரு புன்னகை தெரிவித்துப் போனாள். வெளியே மகன் அவனுடைய மோட்டார் சைக்கிளைக் கிளப்பியபோது ஒரு விமானமே கிளம்புவது போலிருந்தது.

நான் சோபாவில் நன்றாகச் சாய்ந்து கொண்டு கண்களை மூடினேன். சுகமாகத் தூக்கம் வரவேண்டும். வரவில்லை. என் ஜன்மம் நடுத்தர வயதுப் பெண்மணிகளைத் தேடி வீடு வீடாகப் போய் காத்துக் கிடக்கும் படியாகிவிட்டது. ஒரு சிஷ்யை கூட நாற்பது வயதுக்குக் குறைந்தவள் கிடையாது.



ஒவ்வொருத்தியுடைய புருஷன், குழந்தை குட்டிகள், வீடு, சமையற்காரிக்களைத் தேடல், கில்ட் ஆஃப் சர்வீஸில் தேர்தல், மூத்த மைத்துனன் பெண்ணுக்குக் கல்யாணம், அடிவயிற்றில் இடது பகுதியில் வலி, இப்படி எத்தனையோ தடைகளுக்கு நடுவில் சுருதி இம்மியும் தவறக்கூடாத வடஇந்திய சங்கீதம் பயிலுவித்து மேடையேற்ற வேண்டும். இந்த மேடையேறுவது குறித்துக்கூட வெவ்வேறு சிஷ்யைகளுக்கு வெவ்வேறு வகைத் தீவிரம். இந்த அன்னபூரணாவுக்கு "பாட்டாவது பூட்டாவது; நாம் ஏன் இதில் மாட்டிக் கொண்டோம்?" என்று கூடத் தோன்றலாம். சுமார் இரு ஆண்டுகள் அவள் தட்டுத் தடுமாறிக் கழித்தாகிவிட்டது. குரல் பண்பட்டு விட்டது. இயற்கையாகவே சங்கீத சூட்சுமம் உண்டு. முன்னேற வேண்டும் என்று மட்டும் ஆசை இருந்தால் இதற்குள் நான்கைந்து முறை மேடையேற்றிப் பாட வைத்திருக்கலாம். ஆனால் அவளுக்கு சோம்பல், சங்கீதம் கற்றுக் கொள்வதற்கு. நான்கு மாதங்களாகச் சமையற்காரி ஒருத்திக்காக எல்லாரிடமும் சொல்லி வருகிறாள். என்னிடம் கூட. இரண்டு முறை இவள் வெளியிட்ட காலண்டர்கள் அகில இந்தியப் பரிசு பெற்றதாகச் சொல்லியிருக்கிறாள். இன்னும் எதில் எதிலோ பெரிய நிபுணத்வம் வாய்ந்தவள். ஆனால் பகல் சாப்பாடு விஷயத்தில் மட்டும் வெகு ஆசாரம். இன்னும் சிறிது நேரத்தில் அவளுடைய கணவனுக்கு டிபன் காரியரில் சாப்பாடு போகும். இப்போது சமையலாவதே அவனுக்குத்தான்.

வேலைக்காரப் பையன் ஒரு பீங்கான் சாஸர் மீது ஒரு கண்ணாடிக் கிளாஸ் நிறையச் சூடான பால் கொண்டு வந்தான். அன்னபூரணா அதில் இலேசாகப் பால் மசாலா சேர்த்திருந்தாள். அவள் அரைமணி நேரத்தில் அவளுடைய வேலையை முடித்துவர முடியாது என்று தோன்றியது.

இம்முறை தூங்குவதற்கு உறுதியான முயற்சி செய்தேன். கண்களை மூடிக்கொண்டு விழிகளைப் புருவ மத்திய திசையில் நிலைக்க வைத்தால் தூக்கம் வருவது போல இருக்கும். பாட்டு வாத்தியார் பிழைப்பில் திடீர் திடீரென்று காத்துக் கிடப்பதைத் தவிர்க்கமுடியாது. இருந்த இடத்திலேயே வகுப்புகள் நடத்தினால் கற்றுக்கொள்ள வருகிறவர்களைக் காக்க வைக்கலாம். ஆனால் இருபது வருஷங்கள் தொழில் செய்தபிறகும் இன்னும் எனக்கென்று ஓரிடம் ஏற்படவில்லை. இன்னும் அண்ணன், மன்னி, மன்னியின் தாயார், மன்னியின் தம்பி, மன்னியின் மூன்று குழந்தைகள் எல்லாருக்கும் விசேஷ அசௌகரியம் அளிக்காமல் நானும் அவர்களுடன் இருக்க வேண்டுமானால் அந்த இரு—அறைக்

குடித்தனத்தில் நான் பாட்டு கிளாஸ் நடத்த முடியாது. நூறு இருநூறு செலவழித்து ஒரு பள்ளிக்கூடத்திலோ அல்லது வேறு பொது இடத்திலோ வகுப்புகள் நடத்த ஏற்பாடு செய்யலாம். எவ்வளவோ பேர் அப்படிச் செய்கிறார்கள். ஆனால் ஒவ்வொரு முறைப் பயிற்சிக்கும் ஒவ்வொரு வகையான மாணவர்கள் வருவார்கள். மிஸஸ் குப்தாவும் அன்னபூர்ணாவும், சுகுணாவும் மிஸஸ் கட்டாரும் என்னிடம் சங்கீதம் கற்றுக்கொண்டு கச்சேரி செய்யலாம் என்று கனவில்கூட நினைத்திருக்க மாட்டார்கள். இதில் சுகுணா எப்படி வந்தாள்,

எனக்குத் தூக்கம் வராது என்று தெரிந்து விட்டது. மீண்டும் சுகுணா வந்து விட்டாள். இந்த சுகுணாவை அவள் என்னிடம் பாட்டு கற்க வருவதற்கு முன்பே தெரியும். நானும் அவளும் ஒரே கல்லூரியில் சேர்ந்து படித்திருக்கிறோம். அப்போதே அவள் குண்டுப் பெண் என்றுதான் அறியப்பட்டாள். ஆனால் குண்டா னாலும் அவள் எவ்வளவோ பேரின் படபடப்புக்கும் காரணமா யிருந்திருக்கிறாள். அப்போது நான் பாட்டு வாத்தியார் ஆவேன் என்று எனக்குத் தெரியாது. அவளுக்குப் பாட்டு என்றால் சினிமா வில் காதலன் அஜீஓஓஓ வென்றால் அந்த 'ஓ' காடு மேடு மலை மடுவெல்லாம் கடந்து காதலியையும் ஓஓஓவென்று எதிரொலி எழுப்ப வைக்கும் ஒரு சாதனம் என்று மட்டும் தெரியும். திடீரென்று மூன்று நான்கு ஆண்டுகள் முன்பு சென்னையில் சந்தித்துக் கொண்டோம். நான் முதலிலே அவளைக் கண்டு கொண்டுவிட்டேன். மிஸஸ் குப்தா வீட்டில் இரண்டாம் முறை யாகச் சந்தித்த போதுதான் அவளுக்கு மிஸஸ் குப்தா ஹிந்துஸ்தானி பாட்டு கற்றுக் கொள்வது பற்றித் தெரிந்தது. மிஸஸ் குப்தா பாட முடியுமென்றால் தன்னால் முடியாதா? யார் பாட்டு மாஸ்டர்? அடே, நீயா.... நீங்களா.... நீங்க பாட்டே கத்துத் தரீங்களா? எவ்வளவு நாளா?

இப்போது இந்தப் பணக்காரர்களுக்கு வழக்கமாகி விட்டது போல சுகுணாவுக்கும் இரண்டே குழந்தைகள். இந்தியா முழுக்கப் பணக்காரர்களாக இருந்து விட்டால் குடும்பக் கட்டுப் பாடுக்கு விளம்பரமே செய்யத் தேவையில்லை. அவளுக்கு இரண்டு பிள்ளைகள். இளையவன் பியானோவும் கித்தாரும் கற்றுக் கொள்கிறான். மூத்தவனுக்கு சங்கீதம் சோம்பேறிகள் பொழுது போக்கு என்ற அபிப்பிராயம் இருக்க வேண்டும். ஒருநாள் என் முன்னிலையிலேயே அவனுடைய அம்மாவை அப்படித்தான் ஒரு சொல் சொல்லிவிட்டான். அன்றிலிருந்து சுகுணாவுக்கு ஒரு வெறியே பிடித்துவிட்டது. தினமும் சொல்லித் தர என்னை வர



முடியமா என்று கேட்டாள். என்னால் அது முடியாது. அதிகம் போனால் வாரம் இருமுறை போகலாம். திடீர் திடீரென்று சுகுணா சில வித்தியாசமான சாயைகள் பாடுவது போலிருந்தது. அப்புறம் திருத்திக் கொள்வாள். ஆறு ஆண்டுகள் தேவைப்படும் பயிற்சி நிலை ஓராண்டுக்குள் அடைந்த மாதிரி இருந்தது. அவளும் சாதனை செய்யக்கூடியவள் என்பதை யாருக்கோ நிரூபித்துக் காட்டப் பாடுபட்டு வருவது போல இருந்தது.

"மாஸ்டர், தூங்கிட்டீங்களா?" என்று அன்னபூரணாகேட்டாள். அவள் கன்னடக்காரி. யார் யாரோ ஆண்பாலைப் பெண்பாலாக்கி ஒருமையைப் பன்மையாக்கி என்னிடம் ஹிந்தி பேசுவார்கள். இவள் மட்டும் அவளுக்குத் தெரிந்த தமிழிலேயே என்னிடம் பேசுவாள். அவள் சக்திக்கு மீறியதாயிருந்தால் ஆங்கிலத்துக்கு மாறிவிடுவாள். கடுமையான ஆசாரம், அதி நவநாகரிகம் இரண்டை யும் அவளால் வெகு சுலபமாக ஒரு சகஜ நிலையில் கடைப்பிடிக்க முடிந்தது.

நான் தம்பூரைப் பிடித்தேன். அதை அவள் தொட்டு ஒரு வாரம் பத்து நாட்கள் ஆகியிருக்கும். மடிமீது குறுக்காகப் போட்டுச் சுருதி மீட்டினேன். ஒரு கணம் அன்னபூரணாவை இன்று கதறக் கதறச் செய்ய வேண்டும் என்று தோன்றியது. ஒரு பெண்ணைப் பாட்டுவாத்தியாரால் அழச் செய்வது போல யாராலும் முடியாது. அவளுடைய கணவனால் கூட முடியாது. தினம் மூக்கு முட்டத் தின்று கொழுக்கும் சோற்று மூட்டையே, இன்று உன்னை என்ன செய்கிறேன் பார்!

எனக்குள் பொங்கி வந்த ஆத்திரத்தையும் துவேஷத்தையும் பார்க்க எனக்கே பயமாக இருந்தது. தங்கள் வயதால் ஏராள மான அனுபவங்களைப் பெற்று அது தரும் ஏராளமான சக்தி கொண்டு எல்லா நடுத்தர வயது மாதுகளும் ஒன்றுகூடிப் பேசி என்னை வாலிபால் விளையாடுகிறார்கள். இந்தக் கோஷ்டி மூன்று குத்து. அப்புறம் எதிரி கோஷ்டி மூன்று குத்து. மீண்டும் முதல் கோஷ்டி மூன்று குத்து. மீண்டும் எதிர் கோஷ்டி மூன்று குத்து. இவர்கள் பந்தாடும் விளையாட்டுக் கருவியாகி விட்டேன்!

தம்பூரை நிறுத்தி அன்னபூரணாவை உற்றுப் பார்த்தேன். அவளும் ஒன்றும் புரியாதவளாக என்னைப் பார்த்தாள்.

"சுகுணா கச்சேரி எப்படி இருந்தது?" என்று கேட்டேன்.

''எந்தக் கச்சேரி மாஸ்டர்?'' என்று அன்னபூரணா கேட்டாள்."

"ஏன், நிறையக் கச்சேரி செய்கிறாளா?"

"என்னைக் கேக்கிறீங்களே, மாஸ்டர், உங்களுக்குத் தெரி யாமலா?"

"சரி, நேத்திக் கச்சேரி எப்படி இருந்தது?"

"எங்கே மாஸ்டர்?"

"மிஸஸ் குப்தா வீட்டிலேதான்."

"கச்சேரி ஒண்ணும் நடக்கலியே, மாஸ்டர்?"

"சுகுணா கச்சேரி நடக்கலை? தியாகராஜன் சொன் னானே?"

"யார் தியாகராஜன், மாஸ்டர்? எனக்கு ஒண்ணுமே தெரியாதே? மிஸஸ் குப்தா இந்த வருஷம் பிரசிடெண்டா எலெக்ட் ஆனதும் ஒரு சின்ன டின்னர் கொடுத்தாங்க. மொத்தம் பத்துப் பன்னிரண்டு பேர்தான் இருந்தோம்."

"சுகுணா கச்சேரிக்குப் பன்னிரண்டு பேர் போதாதா?"

"கச்சேரி இல்லை, மாஸ்டர். அவ பாடினா. நான் பாடி னேன். மிஸஸ் குப்தா பாடினாங்க. பாக்கப் போனா அது உங்க கச்சேரி மாஸ்டர். எல்லாரும் உங்க ஸ்டூடண்ட்ஸ்தான் பாடினோம் மாஸ்டர்."

"தபலா யார்?"

"குப்தாவே வாசிச்சார், மாஸ்டர். ஒரே காமெடியாத்தான் இருந்தது. அவருக்கு ஒரு தாளமும் தெரியாதே."

நீ சொல்கிறபடி நடந்திருந்தால்கூட அது நீ நினைக்கிறபடி இல்லை என்று நான் அவளுக்குச் சொன்னால் புரியாது. சுகுணாவை எனக்குத் தெரிகிற மாதிரி அன்னபூரணாவுக்குத் தெரியாது. இவளுடைய இலட்சியங்கள் வேறு, சுகுணாவுடையது வேறு.

நான் தம்பூராவைத் தள்ளிவைத்தேன். "இன்னிக்கு கிளாஸ் வேண்டாம்," என்றேன்.

"ஏன் மாஸ்டர்?" அன்னபூரணா பாதிக் கெஞ்சுவது போலக் கேட்டாள்.

"இந்தத் தொழிலுக்கே தலைமுழுகிட்டு நான் ஓடிப் போகப் போறேன்."

எவ்வளவோ லட்சக்கணக்கான முதல் போட்டு, பலர் தலை விதியை நிர்ணயிக்கக் கூடிய பதவிகளை வகிப்பவள், நான் மேற் கொண்டு என்ன கத்தப் போகிறேனோ என்று கேட்கக் காத்தி



ருந்தாள். அவளுடைய வாழ்க்கை கொண்டிருந்த பரப்பு, நுணுக்கம், பிறர் வாழ்க்கையைப் பாதிக்கக் கூடிய சக்தி—இதற்கெல்லாம் சற்றும் பொருத்தமில்லாத இந்தப் பாட்டு வகுப்புக்காக இந்த நேரத்தையும் இவ்வளவு கவனத்தையும் எனக்குத் தருவதற்கே நான் எவ்வளவு நன்றி கொண்டவனாக இருக்க வேண்டும்? நான் கற்றுத்தரும் பாட்டு அவளுக்கு அவளறிந்த எந்தத் துறையில் அவளுக்கு விசேஷ முன்னேற்றம் தரப்போகிறது?

நான் தீர்மானமாகவே எழுந்துவிட்டேன். அவளும் என்னை வற்புறுத்த மனமில்லாமல் எழுந்து நின்றாள். எனக்காகப் பாவம் சமையலறையில் எவ்வளவு பரபரப்போடு அவளுடைய வேலை களை முடித்துக் கொண்டாளோ?

"மறுபடியும் எப்ப கிளாஸ், மாஸ்டர்?" என்று அன்ன பூரணா கேட்டாள். "என்னிக்கு ஊருக்குப் போறீங்க?"

"எந்த ஊருக்கும் போகலியே... ஆமாம் போகப் போறேன். ஒரேயடியாப் போகப் போறேன்."

மறுபடியும் அன்னபூரணா மௌனமானாள்.

"என்னை மன்னிச்சுடு, அன்னபூரணா இன்னிக்கு மனசு சரியில்லே எனக்கு."

"இதென்ன, மாஸ்டர்? எனக்கு முதல்லியே தெரியும், மாஸ்டர்; இதுக்கெல்லாம் மனசு கலங்கிடுவாங்களா?"

"எனக்கு எவ்வளவு துரோகம் நடந்திருக்குன்னு தெரியாது, உனக்கு.."

"யாரும் துரோகம் செய்யலை, மாஸ்டர். எல்லாரும் உங்களை நினைச்சுண்டுதான் பாடறோம். நாங்க ஏதாவது பாடறோம்னா அது நீங்க கொடுத்த வித்தை, மாஸ்டர்."

"உனக்குத் தெரியாது, அன்னபூரணா..."

"மாஸ்டர், மாஸ்டர். நீங்களே கண்ணாலே கண்ணீர்விட்டா நான் அழுதுடுவேன், மாஸ்டர்."

நான் சிறிது சமாளித்துக் கொண்டேன். அன்னபூரணா என்னைக் கைப்பிடித்து ஒரு சோபா மீது உட்கார வைத்தாள். என் கால்கள் என்னை அதிக நேரம் சுமந்து கொண்டு நிற்க முடியாது என்று எப்படியோ அவள் தெரிந்து கொண்டிருந்தாள்.

வெளியே ஒரு நிழல் ஆடியது தெரிந்தது. அன்னபூரணா என்னைத் தனியாக விட்டுவிட்டுச் சமையலறைப் பக்கம் சென்றாள். நான் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு

முன்அறைக்கு வந்தேன். சீருடையணிந்த ஆள் ஒருவன் ஒரு மூலை யில் நின்று கொண்டிருந்தான். மின்னலடிக்கும் வெண்மை என்று தலைப்பிட்டு ஒரு கசங்கிய மங்கல் ஜிப்பாவுடன் நான் அவனுடைய சீருடையின் கண்ணைப் பறிக்கும் வெண்மையைப் பார்த்து வியந்து நின்றதைப் புகைப்படம் எடுத்து விளம்பரத்துக்குப் பயன்படுத்தலாம். அவன் என்னைப் பார்த்து ஒரு தற்காப்புப் புன்னகை புரிந்தான். 'நீ பாட்டுக்கு இரு' என்று சொல்வது போலக் கையைக் காண்பித்து விட்டு நான் வாசல் வெராண்டாவுக்கு வந்தேன். வேலைக்காரப் பையன் ஒரு நீள ஹோஸ் குழாய் கொண்டு புல்வெளிக்கும் செடிகளுக்கும் தண்ணீர் வீசியடித்துக் கொண்டிருந்தான். அதனால் அங்கே வெராண்டாவில் சற்றுக் குளுமையாகவே இருந்தது.

சீருடைய ஆள் ஒரு டிபன் காரியரை எடுத்துக்கொண்டு வெளியே போனான். அவனைத் தொடர்ந்து அன்னபூரணா வந்தாள். "இங்கே வந்துட்டீங்களா, மாஸ்டர், நான் உள்ளே தேடிட்டு வறேன்" என்றாள்.

"அடுத்தவாரம் திங்கட்கிழமை வரேன், சரியா?" என்றேன்.

ஒரு மிகச் சிறு தயக்கத்துக்குப் பிறகு, "சரிதான், மாஸ்டர்" என்றாள்.

நான் ஓரடி எடுத்து வைத்துவிட்டேன். "மாஸ்டர், உங் களுக்கு யாரும் துரோகம் பண்ணமாட்டாங்க" என்று அன்ன பூரணா சொன்னாள்.

"உனக்கு நல்ல மனசு. அதான் அப்படித் தோணறது. ஆனா குருங்களுக்கு சிஷ்யங்க துரோகம் காலம் காலமாப் பண்ணிண்டு தான் வராங்க. ஒருவேளை குருவுக்கு துரோகம் பண்ணாமே வித்தை பெரிசா விருத்தி ஆகாதோ என்னவோ. அந்தப் பாவத்தைப் போக்கத்தான் எப்பப் பார்த்தாலும் குரு ஸோத்ரம், குரு ஸ்துதி, குரு வந்தனம் செய்யறாங்க. நான் குருத் துரோகம் பண்ணலே, அதான் இப்படி வெயிலிலேயும் மழையிலேயும் தெருத் தெருவா அலையறேன்."

அன்னபூரணா நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந் தாலும் அவள் அதைச் சிறிது கூட மனதில் ஏற்றுக் கொள்ளத் தயாரில்லை என்று எனக்குத் தெளிவாகவே தெரிந்தது. எனக்குத் திடீரென்று அவள் மீது ஏராளமான மதிப்பு தோன்றியது. இவள் மட்டும் பாட்டு கற்றுக்கொள்ள இன்னும் சிறிது அக்கறை காட்டினாலும் இரண்டே ஆண்டுகளில் தேசிய விழாக்களில் பா— டக்கூடும். ஆனால் அவளுடைய சிறந்த மனோதர்மம் சங்கீதம் பக்கம் சிறிது கூடச் சாயவில்லையே?



"சுகுணா சும்மா பாடலை, அன்னபூரணா. நேத்திக்கு அவ பதினைஞ்சு நிமிஷம்தான் பாடியிருப்பா. ஆனா அது வேறு எதுக்கோ ஒத்திகை. அந்தக் கச்சேரியிலே இந்த சகாதேவுக்கு ஒப்பந்தம் இருக்காது."

இப்படி அவதிப்படுகிறீர்களே என்ற அங்கலாய்ப்போடு அன்னபூரணா என்னைப் பார்த்து நின்ற மாதிரி இருந்தது.

"நீ உன் புருஷனுக்குச் சமைச்சுப் போடறதுக்குத்தான் என்னைக் காக்க வைச்சே. அப்படிக்கூடச் சொல்லக் கூடாது. நானாத்தான் காத்திருக்கேன்னு சொன்னேன். சுகுணா என்னை ஒருநாள் வரச்சொல்லிட்டு ரொம்ப நேரம் காக்க வைச்சா. அப்புறம் ஒரே தலைவலி, வயிறே சரியில்லேன்னு சொன்னா. நான் கிளம்பிட்டேன். நான் அந்தத் தெருவைக் கடந்து ரோடுக்கு வந்து ரொம்ப நேரம் பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். அப்போ அவ காரிலே போனா. அது கூட ஏதோ டாக்டர்கிட்டே போகதுக்காக இருக்கும்னு நான் வித்தியாசமா நினைக்கலே. ஆனா அடுத்த நாளே தெரிஞ்சுது, அவ ஒரு ரிக்கார்டிங் தியேட்டர் போயிருக்கான்னு. அங்கேந்து ஒரு ஷுட்டிங்குக்கும் போய் மறுநாள் காலையிலேதான் வீடு திரும்பியிருக்கா. தலைவலி, வயித்துவலி எல்லாம் சரியாப் போயிடுத்து. ஏன்னா அந்த சஞ்சீவி இருக்கானே — அதான் அந்த வயலினிஸ்ட்—அவன் இவளைப் பூரணசந்திர ராவ் கிட்டே சிபாரிசு பண்ணி சினிமாலே பாடதுக்கு ஏற்பாடு பண்ணிடறேன்னு சொல்லியிருக்கான். சினிமாலே பாடற துக்கு இந்த சகாதேவ் மாஸ்டர் பிரயோசனமில்லேன்னு யாரோ இவகிட்டே சொல்லியிருக்கா. இப்போ வயலின் சஞ்சீவிதான் அவளுக்கு மாஸ்டர்."

அன்னபூரணாவின் முகத்தில் இருந்த சலனமற்ற தோற்றம் திடீரென்று 'டேய் முட்டாள், எல்லாம் எனக்குத் தெரியும்டா!' என்று தெரிவிப்பது போலிருந்தது. என்ன அழுத்தம் இந்த மாது களுக்கு! பாதாளத்தில் விழுந்தவனைத் தூக்கிக் கரையில் சேர்ப்பதிலும் சரி, தூங்கும்போது கழுத்தை நெரித்துக் கொன்று போடுவதிலும் சரி, என்ன நெஞ்சழுத்தம்!

ஏனோ எனக்கு என் மன்னியின் நினைவும் திடீரென்றுவந்தது. வாய் ஓயாமல் தொணதொணக்கும் எண்பது வயதுக் கிழத்திலிருந்து வாய் ஓயாமல் அழுது கொண்டிருக்கும் மூன்று வயதுக் குழந்தை வரை ஏழெட்டுப் பேர்கள் நடுவில் ஓர் இருட்டு அறையில் நாளெல் லாம் அடுப்பை விட்டு அகல முடியாமல் உழைக்க வேண்டி யிருக்கும் அவளுக்கும்தான் எவ்வளவு நெஞ்சழுத்தம்! ஒருமுறை ஒருத்தர் பற்றி ஒரு அபிப்பிராயம் கூறியிருக்கிறாளா?

அவளுக்குத்தான் எவ்வளவு நல்ல குரல்! அவளுக்கு ஐந்து நிமிடம் சுருதி கூடிப் பாடுவதற்கு முடிவதில்லையே? அவளுக்கு மட்டும் ஆசைகள் இருக்காதா? அவளுக்கும்தான் வயதாகிக் கொண்டு போவது தெரியாதா? எப்படி இவ்வளவு அழுத்தமாகவும் கர்ம சிரத்தையுடனும் இவர்கள் அற்ப சொற்ப காரியங்களையே செய்து கொண்டு முழு ஆயுளையும் கடத்தி விட முடிகிறது?

அந்தப் பிரதேசமே அதிர்ந்து விடும்போல ஒலியெழுப்பிக் கொண்டு அரக்கன் போன்ற மோட்டார் சைக்கிள் அன்ன பூரணாவின் மகனையும் மகளையும் சுமந்து கொண்டு கேட் வெளியே வந்து நின்றது. அன்னபூரணா ஓடிச் சென்று கேட்டைத் திறந்தாள். அந்த மோட்டார் சைக்கிள் வெகுவேகமாகப் போகக் கூடியதாக இருக்க வேண்டும். இருவருடைய தலைமயிரும் மிகவும் கலைந்திருந்தது.

ஒரு நொடியில் அன்னபூரணாவால் இந்த கேட்டைத் திறந்து தன் மகன் மகளை உள்ளே வரவிடும் செய்கையில் எப்படி இவ்வளவு கலகலப்பை உண்டு பண்ண முடிகிறது என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது. எல்லாம் ஐந்தாறு வார்த்தைகள் தான் இருக்கும். அம்மாவும் ஒருமுறை சிரித்தாள். அவளுடைய குழந்தைகளும் சிரித்துக் கொண்டார்கள். அந்த இடமே கவலை, கோபம் முதலியன இருக்க முடியாததோர் பிரகாசம் கொண்டது போல மாறிப் போயிற்று.

இம்முறையும் மகன் என்னைப் பார்க்கவில்லை. ஆனால் மகள் எனக்கென்று ஒரு துளிப்புன்னகை தந்தாள். அன்னபூரணா நான் குமுறிக் கத்துவதைக் கேட்டபடி மௌனமாக நிற்கும் புதிரான அனுபவத்துக்கு இந்த இளம் பெண்ணின் புன்னகை சற்றும் குறைந்ததில்லை என்று தோன்றியது.

1985